*Kumaraṉ*

*Āram 1, muttu 12*

*November 14, 1923*

Record no. 313




"என்கடன் பணிசெய்து கிடப்பதே"

( வாரப் பதிப்பு. )

புதன்கிழமை தோறும் பிரசுரமாகும்.

"ஆலயந் தொழுவது சாலவு நன்று" "திரைகட லோடியுந் திரவியந் தேடு"

ஆரம் க. } காரைக்குடி, உருத்திரோற்காரிஞூ ஐப்பசிமீ உகஅ (14-11-23) { முத்து கஉ

## ஞானப் பூங்காவனம்.

ஒரு நாள் காலைப் பொழுதில், எளியேன் தூய நீரிற்ருேய்ந்து, வெண்டுகில் பூண்டு, தூநீறணிந்து கொண்டு, அம்மையப்பராக இலங்கும் நமது அருட்கடலாகிய சிவபரம் பொருவள அருச்சிக்க, அன்பெனு மலர் கொய்வான், நமது தேவாரத் திருஞான்ப் பூங்காவனத்தை நண்ணினேன். நமது நடராஜ ராஜ வள்ளலார் திருநடம் புரியும் திருக்கோயிலே அதன் வாயிலாகப் பொலிந்து கொண்டிருந்தது. அப்பொற் கோபுரத்துட் புகுந்தேன். எங்கும் சிவமணம் செறிந்திருந்தது. திருநான்மறையும் தெய்வவாகமங்களுமாய பச்சைப் பசுங்கொடிகளும் செடிகளும் என் கண்களைக் கவரா நின்றன. அவைகளில் நருமம் எனுந் தளிர்கள் மிளிர்ந்து கொண்டிருந்தன. அத்தளிர்களினிடையே அறவுரைகளும் மறைமொழிகளுமாகிய பூங்கொத்துக்கள் பொலிந்து கொண்டிருந்தன. அக்கொத்துக்களில் அழகிய அன்பு மலர்கள் அலர்ந்திருந்தன. அம்மலர்கள் ஞான ஒளியை வீசிக்கொண்டிருந்தன. அவைகளில் அருள்மணம் கமழ்ந்து கொண்டிருந்தது. சிவானந்தத் தேன் விளைந்துகொண்டிருந்தது. அச்செடி கொடிகட்கு அணித்தாக, அழகிய மரங்கள் பல அணி அணியாகத் தாங்கவியலாத தலையுடையனவாய்த் தழைத்து நின்றன. குளிர்ச்சி பொருந்திய கொத்துக்களையுடைய கொன்றை மரங்கள், சிவ பஞ்சாக்ஷரமெனச் சிறந்து இலங்கும் ஐந்து அழகிய இதழ்களையும், ஓங்கார வடிவமாக உயர்ந்து வளர்ந்த கம்பிகளையும் உடைய பொன் மலர்களை உதிர்த்துக்கொண் டிருந்தன. வில்வமரங்கள் பல விளங்கிக் கொண்டிருந்தன. மற்றும் செண்பகம் பாதிரி முதலிய பல தருக்கள் நன்மலர்களை உகுத்துக்கொண்டிருந்தன. ஒருபால் வாழை மா பலா முதலியவைகளில் கனிகள் பழுத்து முதிர்ந்து சாற்றைறவடித்துக்கொண்டிருந்தன. அவைகளுக்கப்பால் அழகிய சிற்ருறுகளும், உவகையூட்டும் தீஞ்சுவைத்தண்ணீரையுடைய ஓடைகளும் ஓடிக்கொண்டிருந்தன. அவ்வாறுகளில் ஏடு எதிரேறிச்செல்வதும் ஓடங்கள் தாமாக ஓடுவதும் அடியவர் அருட்டிறத்தை விளக்கிக்கொண் டிருந்தன. அவ்வோடைகளின் பக்கலில்தாழைகள் இனியமடல்களையுடையனவாக இலங்கிக்கொண்டிருந்தன. அவ்வாறுகளின் பக்கலில் ஓங்கி உயர்ந்த தென்னை மரங்களும், கமுகமரங்களும் வரிசை வரிசையாகக் காணப்பட்டன. சிறிது தூரத்தில் பொற்குன்றங்கள் பல பொலிந்து நின்றன. அக்குன்றங்களினின்றும் அருவிகள் ஆங்காங்கு ஓடி வந்தன. இவ்வாறு வருணனைக்கு எட்டாத வண்ணம் இயற்கையின்பம் எங்கும் செறிந்திருந்தது. அந்நீரோடைகளின் டாங்கரில் சிவநேசமிக்க தவநேசர் பலர், திருநீறுங் கண்டிகையுந்தாங்கித் திருவைந்தெழுத்தை ஓதிக்கொண்டிருந்தார்கள். மற்றும் அன்பிற் சிறந்த அடியவர் பலர் தெய்வ மணக்கும் அருட்பாக்களை ஓதிக்கொண் டிருந்தார்கள். அவைகளை உற்றுக் கேட்டுக்கொண்டிருந்த கிள்ளைகள் கீதமினிய குரலோடு திருப்பி இசைத்துக்கொண் டிருந்தன. அப்பொழிலிடைவாழ் சுந்தரத்தின் பக்குயில்களும் பூவைகளும் அப்பாடல்களை ஆனந்தமாகச் செவி மடுத்துக்கொண்டிருந்தன. இன்னிசை வண்டுகள் பல ஓங்கார ரீங்காரஞ் செய்து கொண்டிருந்தன. ஆகாயத்தில் ஒருபால் சூரியன் ஒளிர்ந்து கொண் டிருந்தான். மற்றொருபால் அவன் அருட்டோற்றத்தால் உண்டாகும் அழகிய வானவில் திகழ்ந்து கொண்டிருந்தது.

அச்சுந்தரச்சோலையில் அழகிய ஆவினங்கள் ஆங்காங்கு பசும்புல்லை மேய்ந்துகொண்டிருந்தன. ஒருபால் மானும் மரையும் மகிழ்ந்து ஓடிக்கொண்டிருந்தன. மயிலினம் தங்கள் அழகிற் சிறந்த தோகைகளை விரித்து ஆடிக்கொண்டிருந்தன. யானைக்குழாங்கள் வரிசை வரிசையாக வந்தன. புள்ளினம் ஆர்த்துக்கொண்டிருந்தன. பொழில் முழுவதும் எழில் திகழ்ந்து கொண்டிருந்தது. அப்பொழிலின் ஒருபுறத்தில் அன்னமாடு மகன்றுறைப் பொய்கைகளும் திருக்கோயில்களும் காணப்பட்டன. ஆண்டு ஒருபால்வெள்விடைமேல் உமாதேவியாரொடு சிவபெருமான்வீற்றிருப்பக்கண்டனன். ஒருபால் புள்ளிமயின்மேல் வள்ளிமணாளன்தோன்றினன். ஒருபால்விண்ணிற்கு மண்ணிற்கு நாதனாகிய விநாயகப்பெருமான் வேண்டுவோர் வேண்டுவதையெல்லாம் ஈந்து கொண்டிருந்தார். ஆண்டு அருந்தவ முனிவரர் பலர் அருச்சித்துக்கொண்டிருந்தார்கள். ஒருபால் ஈயும் எறும்பும் ஏத்திக்கொண்டிருந்தன. சிலந்தியும் சிவவழிபாடு செய்து கொண்டிருந்தது. ஒணுனும் உயர்தவம் உஞற்றிக்கொண் டிருந்தது. பசுவினம் பக்திசெய்து கொண்டிருந்தன. யானைக்குழாங்கள் தம் துதிக்கைகளில் மலரும் நீரும் கொணர்ந்து துதித்துக்கொண்டிருந்தன. ஒருபால்மாசில்வீணை முரன்று கொண்டிருந்தது. மணி முழவு அதிரா நின்றது. சங்கங்கள் ஆர்த்தன. சாமரைகள் பனித்தன. அடியவர் பலர், "ஹரஹர" வெனும் ஆராவமுத மொழிகளால் அருட்பெருந்தகையாரை ஏத்திக்கொண்டிருந்தனர். சேர சோழ பாண்டியராகிய முடிபுனை வேந்தர்மூவரும் முடிதாழ்த்தி நின்றனர். இவ்வாறு அவ்வழகிய ஞானப்பூங்காவனம் முழுதும் பேரின்பமணமும் ஞான ஒளியுமே இலங்கிக்கொண்டிருந்தன. ஒருபால், 'மனிதர்காள் இங்கே வம்மொன்று சொல்லுகேன்

கனிதந்தாற் கனியுண்ணவும் வல்லிரே புனிதன் பொற்கழ லீச னெனுங்கனி இனிதுசாலவும் ஏசற்ற வர்கட்கே.' என் திருநாவுக்கரசடிகளும்,

'மத்தயாவன யேறிமன்னர் சூழ வருவீர்காள், செத்தபோதி லாருமில்லைச் சிந்தையுள் வைம்மின்கள், வைத்தவுள்ள மாற்றவேண்டா வம்மின் மனத்தீரே, அத்தர்கோயி லெதிர்கொள்பாடி யென்பதடைவோமே' எனச் சுந்தரமூர்த்திசுவாமிகளும் யாவரையும், "அன்பர்களே! வருக! வருக!! ஆராவின்ப அருங்கனியிவைப் பருகுக! பருகுக!!" என்றழைப்பக்கண்டு, அன்னோர் அருட்டாளிணைகளில் வீழ்ந்துபணிந்து எழுந்தேன். பின்னர் அப்புட்பச்செடிகளை அடைந்தேன். அவைகளில் அழகுபெற அலர்ந்திருந்த அன்பு மலர்களை என் கண் மலரால்கொய்தனன். மனமெனும் பூங்கூடையில் மகிழ் சிறப்பவைத்து மாதேவனை அருச்சித்து மகிழ்ந்தனன்.

அன்பர்களே! இத்தகைய சிவஞானப் பூங்காவனத்தை நண்ணிப் பேரின்பப் பெருவாழ்வுபெற முயலாது, ஏனோ உங்களிற் பலர் சிறுமை இன்பத்தை நல்கும் தீய நாவல்காடுகளை நண்ணித் திசை தெரியாது அல்லற்படுதல் வேண்டும்? தீந்தமிழ்த்தேவாரத் திருப்பாசுரங்களை நீங்கள் ஓதுதலாகாதா? அவ்வருட்பாக்களால் ஆண்டவனை அருச்சிக்க முயலலாகாதா?

தேவாரம்—அர்ச்சனை.

வேற்றாகிவிண்ணாகிநின்றாய்போற்றி (ற்றி
மீள ாமேயாளேன்னைக்கொண்டாய்போ
யூற்றாகியுள்ளேயொளித்தாய்போற்றி
யோவாதசத்தத்தொலியேபோற்றி
யாற்றாகியங்கேயமர்ந்தாய்போற்றி
யாறங்கநால்வேதமானாய்போற்றி
காற்றாகியெங்குங்கலந்தாய்போற்றி
கயிலைமலையானேபோற்றிபோற்றி.

பண்ணினிசையாகி நின்றாய் போற்றி
பாவிப்பார் பாவமறுப்பாய் போற்றி
எண்ணுமெழுத்துஞ்சொல்லானாய்போற்றி
என் சிந்தை நீங்கா விறைவா போற்றி
விண்ணு நிலனுந் தீயானாய் போற்றி
மேலவர்க்கு மேலாகி நின்றாய் போற்றி
கண்ணின் மணியாகி நின்றாய் போற்றி
கயிலை மலையானே போற்றி போற்றி.
—அப்பர்.

பந்துசேர் விரலாள் பவளத்துவர் வாயினாள் பனிமாமதி போன் முகத்து, அந்தமில் புகழாண் மலைமாதொடு மாதிப்பிரான், வந்துசேர் விடம் வானவ ரெத்திசையுந்நிறைந்து வலஞ்செய்து மாமலர், புந்தி செய்திறைஞ்சிப் பொழி பூந்தராய் போற்றுதுமே. —சம்பந்தம்.

ஊன மில்லாவடியார்தம்மனத் தேயுறஞானமூர்த்தி நட்டமாடி நவிலுமிடந், தேனும் வண்டு மதுவுண்டின் னிசை பாடியே, கானமஞ் ஞையுறையுந்தண் கழக்குன்றமே. —சுந்தரர்.

அரு. சோம.

# பர்மா நாட்டுக்கோட்டையார் சங்கம்.

—(o)—

## வருமானவரிக் கமிஷனரோடு சம்பாஷணை.

## தருமப் பணங்கட்கு யுத்தக்கடன் பத்திரம் வாங்கிவைக்க வேண்டுமாம்.

## ரொக்க வரவின்மேல் வரிபோடவேண்டும்.

பர்மா வருமான வரிக் கமிஷனரின் அழைப்பின்மீது ஸ்ரீமான் எஸ். ஆர். எம். எம். வி. டி. எம். திருப்பதிசெட்டியார், ஸ்ரீமான் தீ. சொ. நாகப்பசெட்டியார், ஸ்ரீமான் பி. எம். ஏ. நாராயணன் செட்டியார் என்னும் மூவரும் பர்மா நாட்டுக்கோட்டை செட்டியார் சங்கப் பிரதிநிதிகளாக உள்நாட்டு வரியிலாக்கா போர்டு மெம்பர் மிஸ்டர் டப்ளியூ காஸ்கெல் ஐ. ஸி. எஸ். என்பவரை 1923-ம் வருஷம் அக்டோபர் மாதம் 22-ந் தேதி திங்கட்கிழமையன்று கண்டு பேசினார்கள்.

பிரதிநிதிகளை மிஸ்டர் காஸ்கெலுக்கு அறிமுகம் செய்வித்த பின்னர் பிரதிநிதிகளின் சார்பாகப் பேசியவர் தாம் கண்டு பேசவந்த விஷயத்தைத்தொடங்கிப் பர்மாவில் செட்டியார்கள் தொழிற் செய்யும் முறைகளை விரித்துரைத்துத் தங்களுக்கு வரிபோட வேண்டிய வருமானத்துக்கான திருப்திகரமான சாட்சியத்தை வருமானவரி உத்தியோகஸ்தர்களுக்கு எடுத்துக்காட்ட முடியாமலிருக்கும் விசேஷ கஷ்டத்தை எடுத்துரைத்தார். பர்மாவிலுள்ள செட்டியார் கடைகளி லெல்லாம் ஏஜெண்டுகள் மூன்று வருஷத்திற்கு ஒருமுறை நியமிக்கப்படுவதால் கணக்குகள் ஏஜெண்டுகளின் காலமுடிவாகிய அம்மூன்று வருஷக்கடைசியிலேயே கணக்குமுடிக்கப் பெறுவதாகக் கூறினர். மூன்று வருஷங்களுக்குள் கணக்கு முடியாத காரணத்தைப்பற்றி வருமானவரி அதிகாரிகள், (1) கடைமுதல் (2) டெபாஸிட்டு முதலிய வழிகளாகவரும் கடன் வாங்கினமுதல் என்னும் இரண்டுவகையாகவும் ஏற்படும்முதலைமதிப்புப்போட்டு அதன்மேல் சராசரி இவ்வளவுவட்டி விகிதமெனக் கணக்கிட்டுக் கூடிவரும் வருமானத் தொகையின் மேல் வரி போடுகிறார்கள். இவற்றோடு இன்னொரு தொகையும் அநியாயமாக மூன்றாவது முதல்எனச் சேர்க்கப்படுகிறது. அதாவது பந்துக்களின் பணமும், தர்ம பராமரிப்பு நிதிகளுமாகும். இதனையே 'மேன் பணம்' என்று குறிப்பிடுகிறார்கள். இன்னொரு அக்கிரமம் நடப்பது என்னவென்றால் 3 வருஷ காலத்தில் இரண்டாவது மூன்றாவது வருஷங்களில் ஏற்கனவே மேற்கண்ட 3 முறைகளாகப் பெரிதாக்கப்பட்ட முதலோடு அவற்றிற்கு முந்தின வருஷங்களில் வந்த வரும்படியையும் சேர்த்துக் கூட்டிக் கணக்குப் பார்க்கிறார்கள். இம்முதலின் பேரில் சராசரி நூற்றுக்கு இவ்வளவு வட்டியெனக் கணக்கிட்டு வருமானத்தை மதிப்பிட்டு விடுகிறார்கள். (1) கடைமுதல் பணம் எந்தக் காலத்திலும் வட்டியில்லாம லிருப்பதில்லையென்றும் (2) கடன் கொடுத்த தொகைமீது வரவேண்டிய வட்டிகளெல்லாம் உடனே வாங்கி விடுவதாகவும் அநியாயமாக முன்னபிப்பிராயங் கொண்டு விடுகிறார்கள்.

மூன்று வருஷங்கள் முடிந்தவுடனே கடைக் கணக்குகளை முடிக்கும்போது ஏஜெண்டு அவற்றைத் தமது முதலாளியிடம் கொண்டுபோய் தமது காலத்தில் செய்த தொழிலை ஒப்படைக்க வேண்டியவராயிருக்கிறார். வருகிற ஏஜெண்டு முடிவு பெறாத லேவாதேவிகளின் பட்டியலை மாத்திரம் எடுத்துக்கொண்டு தமது வேலையைத் தொடங்குகிறார். அதனால் பர்மா செட்டியார்களது தொழில் நடைபெறுகிற விசேஷச் சூழ்நிலைகளில் அவர்களுக்கு வருமானவரி உத்தியோகஸ்தர்களிடம் யாதொருவித சமாச்சாரமும் சொல்லக்கூடாதென்ற எண்ணம் சற்றுமில்லா திருக்கையில் அளவுக்கு அதிகமாகக் கவனிக்கப்படும் மதிப்பின் பேரில் போடப்படும் தாங்கற்கரிய வருமானவரியை மாற்றுவதற்குத் தக்க வண்ணம் போராட முடியாமலிருக்கிறது. இதற்காகவே ரொக்கவரவின்மேல் வரிபோட வேண்டுமென்று சங்கங் கேட்டுக்கொள்ளுகிறது. அதாவது ஏற்கனவே வசூலான வட்டியின் மேல் வரிபோட வேண்டுமேயன்றி வருமானவரிக் கணக்கெடுக்கும் காலத்தில் வரவேண்டிய வட்டியின் மேல் வரி போடக்கூடாதென்கிறது.

### வாதம்.

அதற்குப் பின் வாதம் நடந்தது. அப்பொழுது ராவ் ஸாஹிப் மிஸ்டர் என். குப்புசாமி ஐயரை வரவழைத்துக் கேட்டதன்பேரில் அவர் பர்மாவில் இரண்டுவிதமான செட்டியார் கடைகளிருக்கின்றனவென்றார். அவை:—

ஏ-ம் பக்கம் பார்க்க.



# மலாய் நாட்டுச் செய்தி.

(ஒரு நிருபரிடமிருந்து)

**கதர்:**—மலாய் நாட்டில் எங்கும் கதர் பாவி இருக்கின்றது. கதர்தான் இந்தியாவின் அடிமைத்தனத்தை—குடியேற்ற நாடுகளில் வசிக்கும் இந்தியர்களின் கண்ணியத்தை—இந்திய மக்களின் சுயேச்சையைக் காக்க வல்லதென்பதை மலேயாவில் வசிக்கும் இந்தியர்கள் நன்கு அறிந்திருக்கின்றனர். அவர்கள் மனதில் உலகம் போற்றும் உத்தமரின் உபதேசம் வேரூன்றி இருக்கின்றது. இங்கு புதிதாக வரும் எச்சுதேசியின் மனமும் கதர் மணம் மிகைப்பட்டிருத்தல் கண்டு ஆநந்தமடையாதிராது. மலேயாவில்செல்வமிகுந்த பல பெரிய வியாபாரிகளும் தனவைசியர்களும், கூலிவேலை செய்பவர்களும் தாங்கள் இதுவரை அணிந்திருந்த அயல் நாட்டாடைகளைக் களைந்து ராட்டினத்தில் நூற்ற நூலால் நெய்த ஆடைகளை யணிகின்றனர். அவர்களினிடையில் சுதேசியம் வேரூன்றி இருக்கின்றது. ஆயினும் அரசாங்க உத்தியோகஸ்தர்களும் மற்றுஞ் சிலரும் இன்னும் தங்கள் அடிமை யாடைகளை விலக்கினார்களில்லை.

**கதர் வியாபாரம்:**—கதரின் தேவை மிகுவதால் பலர் இங்கு கதர்வியாபாரஞ் செய்கின்றனர். இந்நாட்டில் பஞ்சு உற்பத்தி யில்லாததாலும், இங்குள்ள இந்தியர்களுக்கு ராட்டினஞ் சுற்ற அவகாச மில்லாததாலும் கதராடை பூராவும் இந்தியாவிலிருந்தே இறக்குமதி செய்யப்படுகிறது. ஒரு மரத்தின் ஆணிவேரில் தாக்கிய நோய் சீக்கிரம் கிளைகளிலும் பரவுதல்போல தாய் நாடாகிய இந்தியாவில் தோன்றிய போலிக்கதர் இங்கும் பாவி வருகின்றது. மலேயாவிலும் பல போலிக்கதர் வியாபாரிகள் வஞ்சகர்கள், தேசத்துரோகிகள், வியாபாரிகள் என்ற கண்ணியத்துக்கே தகுதியற்ற பலர் பொன்னாசையால் இழிதொழிலாகிய போலிக் கதர்வியாபாரஞ் செய்ய முற்பட்டு விட்டனர். மதுரை பெஜவாடா முதலிய விடங்களில் தேசத்துரோகிகளால் மில் நூலில் கதர் போன்று நெய்த பாவத்துணிகளை இவர்கள் தருவித்து கதர் கதர் என்று பேராடம்பரத்தோடு விற்கின்றனர். அவைகளைப் பல பேதை இந்திய மக்கள் உண்மையான ராட்டின நூற்கதரென்றும், கதர் மிக மெல்லிதாக நூற்று நெய்யப்பட்டிருக்கிறதென்றும், வாங்கி யணிந்து ஏமாறுகின்றனர். அந்தோ! இந்தியாவில்தான் பலர் தேசத்துரோகஞ் செய்ய முற்பட்டுவிட்டனரென்றால் இங்குமாமுற்படவேண்டும்? மலேயா இந்தியர்கள் தங்களின் தேசப்பற்றை வெளியிடும் வகை இதுவா? இன்னும் ஒரு விசேஷம் இங்கு நடைபெறுகின்றது. பல புண்ணிய புருஷர்கள் 9000நி.மல்லைஇடையிலுடுத்து ஒரு ஜாதியடி அகலம் கெண்டை நெய்த கும்பகோணம் சால்வையைக் கழுத்தைச் சுற்றி உல்லாசமாகப் போட்டுக்கொண்டு, மிருதுவும் பளபளப்புமான பட்டுமாக் குடித்துணியுடன் கதர் வியாபாரஞ் செய்கின்றனர். ஐயோ! இவர்களின் வியாபாரம் லாபத்துக்கா? அல்லது தேச சேவைக்கா? தேச சேவைக்கென்றால் மிக அழகாகவிருக்கும்! பரதேச உடையிற்பற்றுள்ள இவர்கள் கதர் விற்க முற்பட்டதாலன்றோ இந்நாட்டிலும் போலியாகிய மில்நூற் கதர் தலைகாட்ட வாரம்பித்துவிட்டது.

**இந்தியக் கூலிகள்:**—இந்நாட்டில் இந்தியக் கூலிகளின் உரிமையைப் பாதுகாக்க ஒரு உத்தியோகஸ்தரை இந்திய அரசாங்கத்தார் இங்கு அனுப்பியிருக்கின்றனர். ஒரு இந்தியரை இப்பதவிக்கு அனுப்பியிருத்தலால் இந்திய அரசாங்கத்தாருக்கு மலேயாவில் அல்லல் படும் இந்தியக் கூலிகளின்பால் அன்பு ஏற்பட்டு விட்டதென்று தோன்றுகிறது. இவர் கோலாலம்பூரிலிருந்து வேலை செய்து வருவார். ஐ சீ எஸ் முதல் வகுப்பைச் சேர்ந்தவரென்றும், இவரின் சம்பளம் இந்திய அரசாங்கத்தாரால் கொடுக்கப்படுமென்றுந் தெரிகின்றன. இங்கு சஞ்சித்துரையுடன் சம அந்தஸ்தோடு இவர் நடத்தப்படுவார். தன்னிஷ்டம்போல், வேண்டும் போது எந்தத்தோட்டத்திலும் புகுந்து, கூலிகளின் வசதிகளைக் கவனிக்கவும், அவர்களின் குறைகளைக் கேட்கவும், இவருக்கு அதிகாரமுண்டு. இனியேனும் இந்தியக் கூலிகளின் கஷ்டம் நீங்குமா? அல்லது இவரும் ஆடம்பரத்திலீடுபெட்டுக் கூலிகளை முன்னிலையிலேயே விட்டு விடுவாரா?

**வருகை:**—நம் தனவணிகர்களி லொருவரும், தென்னிந்தியாவில் பிரபலஸ்தருமான ஸ்ரீமான் சர் சா. ராம. மு. அ அண்ணாமலை செட்டியாரவர்கள் இந்நாட்டிற்கு வருவதாக வதந்தி உலாவுகின்றது. இவர் போன்ற பல தனவந்தர்கள் இந்நாட்டைப் போன்றகுடியேற்ற நாடுகளுக்கு வருவார்களானால், இங்குள்ள இந்திய மக்களின் குறைகள் அவர்கள் மனதில் ஊன்றி தேசத்தொண்டில் அவர்களை ஈடுபடுத்து மென்பது திண்ணம். செட்டியாரவர்கள் தங்களின் வியாபாரத்தைக் கவனிப்பதோடு இந்திய மக்களின் நிலைமையையும் கவனித்து அவர்களுக்கு வேண்டும் உதவி புரிந்து தம் வருகையை என்றும் மலேயா இந்தியர்கள் மறவாதவாறு செய்வார்களாக!

**கிரௌன் ஏஜெண்டு:**—இந் நாட்டு அரசாங்கங்களுக்கு வேண்டிய சகல சாமான்களும் லண்டனில் ஒரு ஏஜண்டு மூலமாகவே பெறவேண்டும். அந்த முறையை நீக்கவேண்டுமென்று ஸ்ட்ரெயிட்ஸ் குடியேற்ற நாட்டுச் சட்ட சபையில் ஒருவர் பிரேரபனை செய்தார். இதன் முடிவு நான் எழுதாமலே உங்களுக்குத் தெரியலாம். நம் இந்தியாவில் சொல்லும் வழக்கப்படி கிரௌன் ஏஜண்டு அனுப்பும் சாமான்கள் மலிவாயும் நயமாயு மிருப்பதால் அந்த முறையை விடமுடியாதென்று கூறப்பட்டது. இந்த வருவாய்களை விட்டு விட்டால் ஆங்கிலேயர்கள் இந்நாட்டில் லாபஞ்சம்பாதிப்பதெவ்விதம்?

# ரதத்திற்கும் ஆட்டுப்பலியா?

சென்ற திங்கட் கிழமையன்று உள்ளூரில், பாஸியனுக்காகச் செய்யப்பெற்ற வெள்ளிரதம், வெள்ளோட்டஞ்செய்யப் பெற்றபோது வெள்ளாடுபலிகொடுக்கப் பெற்றதாம்! கொடுமை கொடுமை!! ஆடு கோழியை வாகனமாகவும், கொடியாகவும் கொண்டு விளங்கும் குமாரக் கடவுள் வீற்றிருந்தருளப்போகின்ற வெள்ளி ரதத்தின் கால்களிலா இரத்த வெள்ளம் படியும்படி செய்வது? அநியாயம்! இந்தத் துர்வழக்கம் பெரும்பாலும் ரதங்கள் வெள்ளோட்டம் செய்யப்பெறும் இடங்களி லெல்லாம் நடைபெறுகின்றது. சில பாவிகள் சாதாரண வண்டிகளை வெள்ளோட்டஞ் செய்யும் பொழுது கூடக் கோழிக்குஞ்சுகளைக் கொல்லுகிறார்கள்! ஒரு ரதம், வண்டி புதிதாகப் புறப்படும்பொழுதுகூட ஒரு ஆட்டின் உயிரைத் தீர்ப்பதென்றால் ஆட்டினம் எப்படி உயிர் தரிக்க முடியும்? இத்தீய வழக்கத்தை நிறுத்துதற்குத் தடையாக இருப்பவர்கள் அவைகளைச் செய்யும் தொழிலாளரே யாவர். இந்தத் தொழிலாளர்களுக்கு ஆடு கோழிகள் இடத்து எப்பொழுது கருணை வருமோ? தனது புத்திரன் ராஜ வீதியில் தேரூர்ந்து சென்ற பொழுது, ஒரு பசுவின் கன்று துள்ளிக் குதித்துத் தெருவினூடேசென்று தேர்க்காலிலகப்பட்டு இறக்க, அதைச் சகியாது, ஒரே அருமைப் புத்திரன்,—அரசிளங்குமரன் என்பதையும்கவனியாது, அவனைத் தேர்க் காலின் கீழே கிடத்தித் தானே அவன் மேல் தேரை யூர்ந்து மனுநீதி கண்ட சோழ மஹாராஜா நியாயத்தை நிலை நாட்டினார். இப்பொழுதோ உலகத்தில் சிறு பிராணிகளை ஹிம்சிப்பது சாதாரணமாகி விட்டது. அதினும் ஆடு கோழிகளின் தலைக்குக் கல்வைப்போர் தொகைதான் அதிகம்! திருவிழாவில் தேரில் சுவாமி புறப்பட்டு வரும்பொழுது அதற்கு முன்னர் எத்தனை ஆட்டுக்குட்டிகளைக் கழுத்தறுக்கிறார்கள்! அந்தோ! ஒரு வாகனம்வெளியேகிளம்பினால் ஒரு ஆட்டுக் கழுத்துக்குக் கத்தி வருகின்றது. ஆட்டை அறுப்பதற்கு முன்னர், ஏக விபூதி ருத்ராக்ஷத்தோடு குருக்கள் மணி யடித்து மஞ்சள் பூசி ஆட்டைப் பூஜை பண்ணி அறுக்க உத்தரவு கொடுக்கிறார். இந்த அநியாயமெல்லாம் திரண்டு உருண்டு தான் வறுமையாகவந்து நமதரை வாட்டுகிறது.

குட்டிச்சாத்தன்.



சேந்தனைக் கந்தனைச் செங்கோட்டு
வெற்பனைச் செஞ்சுடர்வேல்
வேந்தனைச் செந்தமிழ் நூல்விரித்
தோனை விளங்குவள்ளி
காந்தனைக் கந்தக் கடம்பனைக்
கார்மயில் வாகனனைச்
சாந்தனைப் போதும் மறவா
தவர்க்கொரு தாழ்வில்லையே.
—அருணகிரிநாதர்.

குமரன் காரைக்குடி.
உருத்திரோற்காரிஞ ஐப்பசிமீ உகவ

## பர்மாவில் வருமானவரி.

போதுவாக வருமானவரி விஷயத்தில் நம்மவர் மிகுந்த சிரமங்களைப் பல விதத்திலும் அடைந்து வருகின்றனர். இது சம்பந்தமான சிரமங்களை நீக்கிக் கொள்வதற்குப் பல இடையூறுகள் இருக்கின்றன. அரசாங்க அதிகாரிகள், நாட்டுக் கோட்டையார் கணக்குகளைச் சரியாகக் காட்டுகிறார்களில்லையென்று கூறுவது வழக்கம். இது போழ்து வருமான வரிக் கமிஷனரோடு நமது சங்கப் பிரதிநிதிகள் கலந்து பேசிய விஷயம் மற்ற பக்கங்களில் வெளியாகி யிருக்கின்றது. அதிலிருந்து நம்முடைய கணக்குகளில் முந்திரிகூட விடாமல் உள்ளுரப்புகுந்து பழகி யிருக்கிறார்களென்பது நன்கு விளங்குகின்றது. இப்போது நிகழ்ந்திருக்கிற சம்பாஷணையில் கணக்குகள் சரியாக வைக்கப் படுவதில்லையென்ற புகார் சொல்லப்படவில்லை. இதற்கு முன்னர் கணக்கைப் பெரும்பாலாக ஒப்புக் கொள்ளாமல் குத்துமதிப்பாக வருமானவரி பலமுறை விதிக்கப்பட்டிருக்கிறது. நிற்க, மிஸ்டர் காஸ்கெல் அவர்களுடன் பிரதிநிதிகள் பேசியதில் முக்கியமான விஷயம் வரவான வட்டித்தொகையின்பேரில் லாபம் பார்ப்பதாகும். அதாவது இனங்களில் கடன் கொடுக்கப்பட்டிருக்கும் தொகைக்கு எவ்வளவு வட்டி வசூலாகிக் கைக்கு வருகிறதோ அந்த அந்தத் தொகைக்கு வருஷாவருஷம் வரிபோட வேண்டுமென்று பிரதிநிதிகள் கேட்கிறார்கள். ஆனால் ஒவ்வொரு இனத்திலும் சீட்டுப் பிறந்த தேதி முதல் நாளது தேதி வரை எவ்வளவு வட்டி வரவேண்டியதாக ஏற்படுகிறதோ அவ்வளவையும் லாபமாகக் கொண்டு வரிபோடுவது உத்தியோகஸ்தர் கொண்டிருக்கிற முறையாகும். நமது தொழில் முறைகளை வங்கிக்காரர்களோடு ஒப்பிட்டுப் பார்க்கப்படாது. வங்கிக்காரர் ஈடில்லாமற் கொடுப்பதில்லை. ஏக தேசம் வெண்ணலையிற் கொடுத்தாலும் மிக மிகப் பெறுமதியுள்ள இனங்கட்கே சிறிது பொருள் கொடுக்கின்றனர். ஈட்டின் பேரிற் கொடுப்பதானாலும்சிறந்தபகுதியிலுள்ளதாகவும் பன்மடங்கதிகமாக விலை பெறக்கூடியதாகவுமிருந்தால்தான் சிறுபொருள் கொடுக்க முன் வருவார்கள். அதனால் அவர்களுடைய பொருளில் ஒரு காசுகூட இழக்க வேண்டி நேருவதில்லை. ஆகவே வரியெப்படிப்போட்டாலும் அவர்களைப் பாதிக்காது. நம்மவருடைய தொழிலையும் வங்கித் தொழிலைப் போலவே வருமானவரி யதிகாரிகள் நினைத்துக் கொண்டிருக்கிறபடியால்தான் இந்தத் துன்பம் நிகழ்ந்து கொண்டிருக்கின்றது. மிஸ்டர் காஸ்கெல் அவர்களும் இதனை நன்கறிந்து கொண்டிருக்கிறாரென்று தெரியவில்லை. நம்முடைய தொழில்முறைகள்யாவும் நம்பிக்கையின் பேரிலேயே நடைபெறுகின்றன. காடுகளிலும் மேடுகளிலும் குடிசைகளிலும் சேற்றிலும் ஏழைகளிடமும் பணத்தை வாரி யிறைத்துவிட்டுப் பிறகு ஒன்றிரண்டாகப் பொறுக்கி எடுத்து வருகிறோம். சில சந்தர்ப்பங்களில் நம்மால் தாங்க முடியாதபடி பணப்போக்கும் நேர்ந்து விடுகின்றது. ஆகவே தொழிலானது உறுதியாகவில்லாமல் போலியாகவே நடைபெற்றுவருகிறது. ஆனால் நம்மவருடைய பிரயாசையினாலும் ஏழைக்குடித்தனக்காரரோடு கலந்து அவர்களுடைய லாபநஷ்டத்தை நம்மவரேற்று பெரு நஷ்டத்திலிருக்கும்போது கூடத் தைரியமாகப் பணவுதவி முதலிய செய்ய முன்வருவதாலும் நமது தொழில் ஒருவாறு வளர்ந்து வருகின்றது. இந்த உண்மைகளை அதிகாரிகள் உணரவில்லை. வட்டிவரத் தாமதப்பட்டால் அநேகமாக அந்த இனம் ருஜுவானதன்று. அந்த முதலையும் வட்டியையும் மெது நிலுவை (சந்தேகப்பட்ட முதல்) யாகக்கருதவேண்டிய நிலையிலாகி விடுகிறது. ஆகவே அதன் வட்டியே யல்லாமல் முதல் தொகையையும் ஏனைய லாபத்தொகையில் கழிக்கவேண்டியிருக்க, மிஸ்டர் காஸ்கெல் நோட்டுப் பிறந்த தேதியிலிருந்து வட்டி கணக்குப்பார்த்து அதனையும் லாபத்தில் சேர்க்கவேண்டுமென்று கூறுகின்றார். விஷயத்தைப் பிரதிநிதிகள் எடுத்துக் கூறிய பின்னர் 'வரியைக்கட்டிவிடுங்கள்; நீங்கள் செலவெழுத வேண்டி நேர்ந்தால் திருப்பிக்கொடுக்கிறோம்' என்று கூறியிருக்கிறார். உள்ள பணத்தைத் திருப்பி வாங்கவே மூன்று வருஷ தாமதத்தோடு நூற்றுக்கு எண்பது செலவும் வருகிறதென்று வருந்துகிற நிலையில் இன்னும் சேர்த்துக்கொடுங்கள் திருப்பிவாங்கலாமென்று கூறுவதற்கு நாம் விசனிக்கிறோம்.

தருமப்பணங்கட்கும் சீதனப் பணங்கட்கும் வரிவிதிக்க முயற்சி செய்யப்படுவதைக் குறித்த வாதத்தில் அவற்றிற்கு வரிபோடநியாயமில்லையென்று பிரதிநிதிகள் கூறியதற்கு மிஸ்டர்காஸ்கெல் கூறியிருக்கும் பதிலானது ஹிந்துதருமங்களில் ஆர்வமுள்ளவர்களின்மனதை நோகச் செய்வதா யிருக்கிறது. ஹிந்து தருமப்பணத்தைக் காப்பாற்றுவதிலும் தருமங்கட்குக்கொடுத்துதவுவதிலும் நம்மவர் கோடிமடங்கு சிறந்தவர்களென்று நாம் பெருமை பாராட்டிக்கொள்ள விரும்புகிறோம். தினந்தினம் பலவழிகளிலும் சிறிது சிறிதாகச் சேர்த்துத்தருமப்பணங்களை நம்மவரொவ்வொருவரும் வளர்த்துவருகிறார்கள். தருமப்பணத்தையெடுத்து விழுங்க எவரும் நினைப்பதில்லை. இதனை உலகறியும். ஆனால் மிஸ்டர் காஸ்கெல் அந்தப்பணங்களையும் சீதனப்பணங்களையும் "யுத்தக்கடன் பத்திரங்களாகவாவது அரசாங்கக்கடன் பத்திரங்களாகவாவது மாற்றிவையுங்கள்" என்று யோசனை கூறியிருக்கிறார். நடைபெற்றுவருகிற தருமங்கள் பலவுண்டு. நம்மவர் கடைகளிலிருந்தால் முக்கால் வட்டி கிடைக்கும். அரசாங்கக்கடன் பத்திரமானால் காலே மூன்று வீசம் வட்டிகிடைக்கலாம். கிறிஸ்தவர் இந்தியாவில் வந்து சமய வழியில் உழைப்பதற்காகப் பணங்களைப் பலவழிகளில் பெருக்கிக்கொண்டிருக்கிறார்கள்? அதற்கு அரசாங்கத்தார் பல வகையில் உதவிபுரிவதையும் நாமறிவோம். ஆனால் அந்தப்பணங்களை யுத்தக்கடன் பத்திரங்களில் போட்டிருக்கிறார்களென்று நமக்குச் செய்தி கிடைக்கவில்லை.

## எண்டிசைக் காட்சி.

### தெருத்தெருவாய் வருகிறது.

பீஜப்பூரில் கள்ளுக்கடைகள் காங்கிரஸ் பிரசாரத்தால் மிகுதியும் பாதிக்கப்பட்டு விட்டதாம். கள் விற்பனையாகவில்லை. அதற்காக அங்குள்ள அதிகாரிகள், கள்குடங்களை யெடுத்துக் கொண்டு தெருத்தெருவாக விற்க உத்திரவு கொடுத்திருக்கிறார்களாம். பலே! நல்ல மாதிரி. இப்படியும் விற்பனை யாகாவிட்டால் வழியில் போகிறவர் தலையில் ஊற்றும்படி உத்திரவிடப்படுமோ?

### பலே! சாஸ்திரியார்!

நமது ராஜாங்கத்தாரின் செல்வக்குழந்தையான கனம் சீனிவாச சாஸ்திரியாரை எல்லோரும் அறிவார்கள். அவரைப்போன்ற சவங்கலை நாம் கண்டதேயில்லை. யாரென்ன சொன்னாலும் பொறுத்துக்கொண்டே யிருப்பார். இப்போது கெனியா முடிவைக் கண்டபின்னர் புளித்துப்போய் விட்டதாம். சென்ற ஒரு மாத காலமாக கதராடையைத்தான் உடுத்துகிறாராம். பாவம்! மகாத்மா பலமுறைசெய்த உபதேசமாவது ஜனங்களின் ஊக்கமாவது சாஸ்திரியாரைக் கதராடையுடுக்கச் செய்யவில்லை. ஆனால் அரசாங்கத்தாரின் செய்கை கதராடையுடுத்தச் செய்துவிட்டது!

### திருப்பூரில் கதர் வியாபாரம்.

இவ்வருஷம் தீபாவளியை முன்னிட்டு திருப்பூரிலிருந்து ஒரு லட்சம் ரூபாவுக்குக் கதராடைகள் விற்பனையாகி யிருக்கின்றனவென்று ஒரு நிருபர் தெரிவிக்கின்றார். நல்ல செய்தி. "கதர் மான்செஸ்டர்" என்று திருப்பூருக்குப் பெயரிட்டழைக்கலாம். தமிழ் நாட்டுக்குத் திருப்பூர் கதர் வியாபாரம் பெருமதிப்புக் கொடுத்திருக்கிறது. இப்படியே தமிழ்நாட்டிற் பலவிடங்களில் கதர்த்தொழிலை அபிவிருத்தி செய்தல் வேண்டும். வைசியநாட்டு இளைஞர்களே! கதருற்பத்திக்கு முயலுங்கள்! இந்தப் பகுதியில் கதருடுப்பார் பலரிருந்தும் தொழிற் படுத்துவாரைக் காணவில்லை. காரணமென்ன? இந்தப் பக்கத்தில் ஒரு ராமசாமி நாய்க்கர் இல்லை!

## உள்ளூர்ச் செய்தி

கள்ளுக்கடை:—பழய சந்தைப் பேட்டையின் தென்கீழ்க் கோடியில் ஒரு சாராயக்கடை இருந்து வருகிறது. சந்தைப்பொட்டலும் அதனையடுத்த மாட்டுப்பொட்டலும் சேர்ந்து பெரிய வெளியாகக்கிடப்பதால் சமீபத்தில் வீடுகளில்லை. பெண்மக்கள் தனியாக அந்தப்பாதையில் செல்லவேண்டியது மிக அவசியமாகவுமிருக்கிறது. அங்கு சாராயக்கடை யிருப்பது பொதுஜன நடமாட்டத்துக்கு இடையூறு செய்வதால் அதனை அப்புறப்படுத்த வேண்டுமென்று காரைக்குடிப் பொதுஜனங்கள் அதிகாரிகட்கு ஒரு மகஜர் அனுப்பியிருக்கின்றனர்.

சுகாதார சங்கம்:—இச்சங்கத்தின் கூட்டமொன்று நேற்று நடைபெற்றது. முனிஸிபாலிடி நகரங்களைப் போல இவ்வூரிலும் கசாப்புக் கடைகளைத் தனியான விடத்தில்தான் ஏற்படச்செய்ய வேண்டுமென்றும், நடு ஊருக்குள்ளிருக்கும் கடைகளை யெடுத்துவிட வேண்டுமென்றும் விற்பதற்கு லைசென்ஸ் இடங் குறிப்பிட்டு லைசென்ஸ் கொடுத்திருக்கும்போது தெருத்தெருவாக வண்டிகளிலும் கூடைகளிலும் தூக்கி விற்பதைத் தடுக்கவேண்டுமென்றும், வீதிகளில் சதாகாலமும் சாக்கடைத் தண்ணீர் செல்வதைத் தடுக்க வழியுண்டா வில்லையா வென்று எழுதிக் கேட்பதென்றும் தீர்மானங்கள் செய்யப் பெற்றிருக்கின்றன.

கசாப்புக்கடை:-முத்து.அரு. பழய வீட்டு சந்தில் ஒரு கசாப்புக்கடை புதிதாகத்திறந்து வைக்கப்பட்டிருக்கிறது. பொதுவாக இவ்வூரிலுள்ள சந்துகள் இயற்கையாகவே மணத்துக்கொண்டிருக்கின்றன. இதோடு கசாப்புக்கடையையும் வைக்க இடங்கொடுத்திருப்பதற்கு விசனியாதிருக்கமுடியவில்லை. யூனியன் போர்டில் தற்போது அங்கம் வகித்திருப்போர்களும் அதன் தலைவரும் விஷயங்களை நன்கு உணரக்கூடியவர்களாகவே அமர்ந்திருக்கின்றனரென்ற நம்பிக்கை நமக்குண்டு. அதற்கேற்பப் பல வீதிகளும் விளக்குகளும் பிறவும் ஆங்காங்கே சீர் திருத்தம் பெற்று வருகின்றன. இதற்கிடையில் நடு ஊருக்குள் கசாப்புக்கடை இடம்பெற்றிருக்கிறது. கூடிய விரைவில் இதனை ஊருக்கு வெளியிடத்திற்கு மாற்றிவிடும்படி யூனியன் போர்டாரை வேண்டிக் கொள்கிறோம்.



## தந்திச் செய்தி.

பினாங்கு இன்று காலை க0-ரு0.
சென்னை உண்டியல் விலை நூற்று அறுபத்தாறு
ஈயம் விலை தொண்ணூற்றெட்டு.
ரப்பர் விலை ஐம்பத்தொன்பது.
ரங்கூன் ஐப்பசிமீ உஅவ

| | |
|---|---|
| பெரிய ஆலை அரிசி | சசரு-0-0 |
| சிறிய ஆலை அரிசி | ருஅரு-0-0 |
| மீடான் அரிசி | சகரு-0-ரு |
| பட்டு நெல் | கக0-0-0 |
| ரயில் நெல் | கஅ0-0-0 |
| வெள்ளை பீன்ஸ் புதிது | உருஉ-அ-0 |
| ஷை பழசு | ககூரு-0-0 |
| சிகப்பு பீன்ஸ் | ககூரு-0-0 |
| காராமணி | ங00-0-0 |
| உளுந்து | ஙச0-0-0 |
| துவரை | சங0-0-0 |
| கடலை | உஅரு-0-0 |
| கோதுமை | சசு0-0-0 |
| தட்டைப்பயறு | ரு00-0-0 |
| மல்லி | உக-0-0 |
| உண்டியல் விலை | கசுஎ-0-0 |
| வெள்ளி | அக-0-0 |
| தங்கம் | ஙரு-அ-0 |
| மோகரா | சுரு-அ-0 |
| பொற்காசு | கசு-க-0 |
| தவணைவட்டி | 0-க0-0 |

தனவைசிய ஊழியர் சங்கம்:—அச்சுக்கூடத்திலிருந்த பழய கைப்பிரஸ் ஒன்றை இனமாக தமிழ்க்குருகுலத்திற்குக் கொடுப்பதென்று தீர்மானித்திருப்பதாக அறிகிறோம். ஊழியன் அச்சுக்கூடத்தில் காலை அ-மணி முதல் அ-சரு வரை யாவரும் நூல்நூற்றுவருவார்களென்றும், ஊழியன்பத்திரிகை செவ்வாய்க்கிழமைகளில் வெளிவருமென்றும் செய்தியெட்டுகிறது.

தீபாவளி:—உகவ இரவு வந்து உஉவ காலையில் தீபாவளிசென்றுவிட்டது. சென்ற வருஷத்தைப்போல் நாலைந்து பங்கு ஜனங்கள் கதராடையே புனைந்திருந்தனர். மல் கட்டினவருக்கும் குறைவில்லை. வாலிபருள்ளும் சிறுவருள்ளும் அதிகத் தொகையினர் கதராடையே உடுத்திருந்தது போற்றத்தக்கது. சென்ற வருஷத்தில் பெரியவர்கள் தங்கள் குழந்தைகளைக் கதருடுத்தல் கூடாதென்று தடுத்தனர். இவ்வருடம் விசேஷமாகயாரும் தடை செய்யவில்லை. வயது முதிர்ந்தோரிற் சிலர் கதருடுத்தியதும் குறிப்பிடத்தக்கதாகும். வேலையாட்களுக்குக் கதராடையே பலருதவினர். பெண்மக்கள் கதர்ச் சேலைக்குத் தாகமெடுத்தலைந்தனர். போதிய அளவு கிடைக்கவில்லை. கதர் விளம்பரம் இல்லாத புடவைக்கடை யில்லவேயில்லை. சிலர் ஆமதாபாத் வேட்டியைக்கூடக் கதரென்று விற்றனர். சீனிவெடிக்கடைகள் பன்னிரண்டு. ஏராளமாகச் சீனிவெடி விற்பனையாயிற்று.

# செய்தித்திரட்டு.

புதுவயல்:—இவ்வூர் சரஸ்வதி சங்கத்தின் சார்பில் நாளிதுமீ ககூஉ ஸ்ரீமாந் பெ. ப. வி. வீர. ச. விருத்தகிரி செட்டியாரவர்கள் தலைமையில் நடைபெற்றது. பல மாணவர்கள் உபந்நியசித்தார்கள் என்று பழ. ராமநாதன் எழுதுகிறார்.

* * *

தேவகோட்டை:— எட்வர்டு ஹாலில் பள்ளத்தூர் ஸ்ரீமாந், அ.மு.முருகப்ப செட்டியாரவர்கட்கு 'ராவ்பகதூர்' பட்டத்தையும், இளையான்குடி ஸ்ரீமாந்,நயினுமுகம்மது அம்பலத்துக்கு 'கான்சாஹிப்' பட்டத்தையும் நமது ஜில்லா கலெக்டர் ராவ்பகதூர் ஸ்ரீமாந் வி. டீ. கிருஷ்ணமாச்சாரியார் B. A. B. L. அவர்கள் நாளிது ஐப்பசிமீ உஎஉ யளித்தார்கள். ராமநாதபுரம் ராஜாவும் ஏனைய பல பிரமுகர்களும் விஜயஞ்செய்திருந்தனர்.

* * *

அமராவதிபுதூர்:— நாளிது உநஉ யாகிய தீபாவளியன்று திருவநாயகியம்மன் கோவிலுக்கு முன்னர் மாலை சு-மணிக்கு சுமார் இருநூறு ஜனங்கள் கூடியிருந்தனர். பஞ்சமர்கள் விசேஷமாகக் கூடியிருந்தனர். ஸ்ரீமாந் ஆ. சொக்கலிங்கச் செட்டியாரவர்கள் தலைமையில் சேர்மாதேவி குருகுல வித்தியாலயக் காரியஸ்தர் ஸ்ரீமாந் ரா. அநந்தகிருஷ்ணய்யரவர்களும், ஸ்ரீமாந் சொ. முருகப்பசெட்டியாரவர்களும், ஸ்ரீமாந் பிச. சுப்பிரமணியஞ் செட்டியாரவர்களும் உபந்நியசித்தார்கள். பஞ்சமர்களுட்பெரும்பாலார் கதராடையே உடுத்திருந்தனர். தீபாவளியன்று இவ்வூரில் ஆண்மக்களில் முக்கால் வரிசைப்பேர் கதராடையே அணிந்திருந்தனர்.

* * *

கூழிபிறை:—தீபாவளி பண்டிகையன்று இவ்வூரின் கண் நிறுவப்பெற்றிருக்கும் தனவைசிய வாலிபர் சங்கம் கூழிபிறைச் சிவனடியார் திருக்கூட்டம் ஆகிய இரண்டின் அங்கத்தினர்களனைவரும் மற்றும் கலாசாலைகளின் மாணவர்களும் கதராடையே புனைந்திருந்ததுடன் அங்கத்தவரல்லாத பல தனவைசியர்களும் மற்றுமுள்ள ஏனையஜாதியார்களில் சிலரும் கதராடையையே பெரிதும் விரும்பி அணிந்திருந்ததானது மிக மிகப்போற்றத்தக்கது. மேலும் இவ்வருடத்தில் கதராடையை விரும்பாத இதர பேர்வழிகளும் அடுத்த வருடமாவது அதற்கு முன்னதாகவாவது இதில் விருப்பங் கொள்ளுமாறு ஸ்ரீ ஷண்முகநாதன் திருவருள் புரிவாராக. கூழிபிறைச் சிவனடியார் திருக்கூட்டத்தின் சார்பில் நாளதுமீ உஉஉ இரண்டாவதாண்டு மூன்றுங் கூட்டம் மாலை உஉஇ நாழிகைக்கு திருவாளர் வீ. பெரி. பழ. சொக்கலிங்கம் செட்டியார் அக்கிராசனத்தில் திருவாளர்களான வெ. கு. சொ. சொக்கலிங்கம் செட்டியாரும் ஏ. ராம. ஏகப்பசெட்டியார்ரும் பி. மு. ராம. வள்ளியப்ப செடடியாரும் செ. பெரி. பழ. இராமசாமி செட்டியாரும் கொலைமறுத்தல் கதராடை பகைமை நூல் என்னும் விஷயங்களை முறையே சொற்பெருக்கிட்டனர் என்று உதவிக் காரியதரிசி யெழுதுகிறார்.

## கோவிலூர் குன்றக்குடி ரோட்டின் திறப்பு விழா.

—0—

ஐப்பசிமீ உஎஉ காலையில் கோவிலூரிலிருந்து குன்றக்குடிக்குத் திரும்புமிடத்தில் (புதிய ரோட்டு ஆரம்பமாகுமிடத்தில்)ஒரு கொட்டகைபோடப்பட்டிருந்தது. இரண்டு கதவுகள் சேர்த்து வெள்ளிப்பூட்டு பூட்டப்பெற்றிருந்தது. ஒன்பதேகால் மணிக்கு ஜில்லா கலெக்டர் ராவ்பகதூர் ஸ்ரீமாந் V. T. கிருஷ்ணமாச்சாரியார் B. A., B.L. அவர்கள் வந்து சேர்ந்தார்கள். காரைக்குடி யூனியன் சேர்மன் ஸ்ரீமாந் ஆவி. பழ. சிதம்பரஞ் செட்டியாரவர்கள் அறிக்கையோடு கூடிய வந்தனோபசாரப் பத்திரத்தைப் படித்தார்கள். பின்னர் ஆச்சாரியாரவர்கள் பூட்டைத் திறந்து விட்டுத் தமிழில் சில வார்த்தைகள் வழங்கினார்கள். பின்னர் மோட்டார்களில் குன்றக்குடி வரை சென்று திரும்பிக் கோவிலூருக்கு வந்து சேர்ந்தனர். அங்கு சிற்றுண்டி விருந்து நடைபெற்றது. இந்த ரோட்டின் நீளம் நான்கு மைல். உச பாலங்கள் கட்டப்பட் டிருக்கின்றன. இதன் மொத்தச்செலவு ரூ ந0,கஅஉ. ஜில்லாபோர்டாருக்கு ரோட்டின் பராமரிப்புக்காகக் கொடுக்கபபட்டது ரூ கஉ,000. ஆக ரூ சஉ,கஅஉ-க்கு காரைக்குடி நகரத்தார் ரூ உரு,நஉஎ உதவியிருக்கிறார்கள். பாக்கி ரூபா கசு,அருரு ஸ்ரீமாந் ஆவி. பழ. சிதம்பரஞ் செட்டியார் அவர்களும், ஸ்ரீமாந் பழ. வெ. ராம. ராமநாதன் செட்டியார் அவர்களுமாகக் கொடுத்துதவி யிருக்கிறார்கள். குன்றக்குடிக்கு இந்த ரோட்டேற்பட்டது பேருபகாரமாகும். இந்த வசதி யேற்படு முன்னர் மழை காலத்தில் கால்நடைகளும், மனிதரும் பட்டபாடு கொஞ்சமல்ல. திருடர்களொருபுறம் துன்புறுத்தி வந்தனர். நாலு மைல் தூரமுள்ள குன்றக்குடிப் பிரயாணம் நூறு மைல் பிரயாணம் போலிருந்தது. இது காலை இப்புதிய ரோட்டு ஏற்படுத்தப் பெற் றிருப்பது குன்றக்குடிக் குமரன் தரிசனத்தைச் சமீபிக்கச் செய்திருக்கிறது. இது ஒரு பெரும் புண்ணியமாகும். இதற்கு முனனின் றுழைத்த ஸ்ரீமான் செட்டியாரவர்கள் இதுபோன்ற பலபயன்றரும்பணிகளை மேற் கொள்வார்களென்று நம்புகிறோம்.

## கடைத்தெரு.

### லண்டன்.

ஐப்பசிமீ உருஉ

| | |
|---|---|
| பித்தளை | ஏழேமுக்கால் பென்ஸ். |
| செம்பு (முதல்தரம்) | £ சுசு—கஉ—சு |

### சென்னை.

ஐப்பசிமீ உஎஉ

லண்டன் நாணயமாற்று தந்தி மூலம் ரூபா ஒன்றுக்குப் பதினுறரையேஅரைக்காலுமரைவீசம் பென்ஸ்.

| | |
|---|---|
| இங்கிலாந்து பாங்கி வட்டி | 4 % |
| இம்பீரியல் பாங்கிவட்டி | 4 % |
| இம்பீரியல்பாங்கிபங்குவிலை | கநகூரு |
| ஷை(கஉருசெலுத்தப்பட்டது) | நசரு |
| தங்கம் ஒருரூபா எடை | உச—ச—சு |
| வெள்ளி நூறுரூபா எடை | எஅ—அ—0 |
| பொற்காசு (பவுன்) | கரு—கரு—0 |

### பம்பாய்.

ஐப்பசிமீ உருஉ

| | |
|---|---|
| இங்கிலீஷ் பார் தங்கம் | உரு—ரு—0 |
| மிண்ட் ரெடி ,, | உரு-ச-சு |
| இங்கிலீஷ் பார் வெள்ளி | எஅ—அ—0 |
| முதலாவதுசெட்டில்மெண்டு | அ0-உ-0 |

### உள்ளூர்.

| | |
|---|---|
| சென்னை உண்டியல்வட்டம் | 0-சு-0 |
| ரெங்கூன் ஷை | க-அ-0 |

## கப்பற்செய்தி.

மலாய் நாட்டிலிருந்து "டீஸ்டா" கப்பல் கார்த்திகைமீ ருஉ சென்னைக்கு வந்து சேரும். க0-தேதியன்று மேற்படி கப்பல் நாகபட்டணத்திலிருந்து மலாய் நாட்டுக்குப் புறப்படும். சென்னையில் இருந்து ரெங்கூனுக்கு "இதோவியா" கப்பல் கார்த்திகைமீ கஉ புறப்படுகிறது.

ரங்கூன்:—இப்பர்மாவில் தலைநகராகிய இவ்விரங்கூனிலும் இன்னும் மற்றைய நாட்டுப் புறங்களிலும் நந்தாய் நாட்டில் இருந்து பொருளீட்டுவான் வந்திருக்கும் இந்தியர்களில் நம்புராதன வழக்கத்தையும் கிருஷ்ண பரமாத்மா போன்ற மகாத்மா காந்தியடிகளின் ஆஞ்ஞையையும் இன்னும் பல உத்தம மேதாவிகளின் ஆஞ்ஞையையும் ஒருங்கே கைக்கொண்ட பல உத்தமர்கள் ஐப்பசித்திங்கள் இருபத்திரண்டாம் நாளில் தீபாவளிப் பண்டிகை யன்று அந்நிய நாட்டு ஆடையை அறவே ஒழித்து நம் புராதன கதர் ஆடையையே பலர் அணிந்திருந்தனர். அவர்கட்குஎன் மனமார்ந்த நன்றியைச் செலுத்துவதோடு இத்தன்மைபோல் எந்நாளும் கதராடையையணிந்து வரவேண்டு மென்று நமது இறைவனை இறைஞ்சுகின்றேன் என்று ராமசிதம்பரம் எழுதுகிறார்.



(இரண்டாம் பக்கத்தொடர்ச்சி.)

(1) செட்டியார் வகுப்பினருக்குக் கடன் கொடுத்து உதவும் பெரிய கடைகள்.

(2) பொது ஜனங்களோடு லேவாதேவி செய்யும் சிறிய கடைகள். என்பனவாம். பெரிய கடைகளில் வரவு வந்த வட்டிமாத்திரமன்றி வரவேண்டிய வட்டிகூடக் கணக்கில் சேர்த்து எழுதப்படுகின்றன வென்றார். வரவு வந்ததாவது கொடுத்ததாவது ஒப்புக்கொண்ட வட்டி விதிப் பிரகாரமும் தவணைப் பிரகாரமும் செலுத்தப்பட்ட ரொக்கப் பதிவே வட்டிப் பதிவென்று ஸ்ரீமான்நாகப்பசெட்டியாரும்,ஸ்ரீமான் நாராயணன் செட்டியாரும் பதில் கொடுத்தார்கள். ரொக்கமாய்ப் பணம் சேருவதில்லை யென்றும், காரியங்களெல்லாம் புஸ்தகத்தில் கணக்குச் சரிக்கட்டுவதே யொழிய வட்டி கொடுப்பதாவது வாங்குவதாவது ரொக்க வியாபார மாகவில்லை யென்றும், வட்டி யென்று ரொக்கமாகக் கொடுப்பதென்பதில்லாமல் மதாடர்வட்டி போடுவதற்காகச் சரியான தேதிகளில் கணக்கு மாத்திரந்தான் செய்வதென்றும் மிஸ்டர் ஐயர் சொல்லி ஆட்சேபிக்க முயன்றார். எந்த லேவாதேவியிலும் கொடுத்த வட்டியைப் பதிவு செய்வதே யொழிய கொடுக்காததைப் புதிவு செய்வதில்லை யென்று ஒப்பாளர்கள் மறுபடியும் கூறினார்கள். சிறிது நேரம் வாதமாடிய பின்னர் நாட்டுக்கோட்டைச்செட்டியார்களின் புஸ்தகங்கள் ரொக்கக் கொடுக்கல் வாங்கல் முறைப்படி வைக்கப்படுகிற கணக்குகள் தானென்று மிஸ்டர் காஸ்கெலுக்கு மனதிற்பட்டதாகத்தெரிந்தது. இதற்கிடையில் மிஸ்டர் ஐயர் கூட்டத்தை விட்டுப் போய்விட்டார்.

கால தாமதம், நிறுத்தி வைத்து விடுதல் முதலிய விஷயங்களைப்பற்றி அடுத்தாற்போற் பேசினார்கள். ஏதாவது பிரத்தியேக உதாரணங்கள் கொடுக்கக் கூடுமாவென்று மிஸ்டர் காஸ்கெல் கேட்டபோது அது பொதுவான புகாரென்றும் முக்கியமாக ஜில்லாக்களில் வருமான வரிக்காரர்கள் தங்கள் தொழிலிடத்தை விட்டுப் புஸ்தகங்களோடு வெகு தூரம் போகவேண்டி யிருக்கிறதென்றும் அநாவசியமாகநிறுத்திவைக்கப்பட்டுத் தொழில் துறைகளில் வெகுகாலம் ஆஜரில்லாம லிருக்க வேண்டியிருக்கிறதென்றும் கூறினார்கள். அத்தகைய சம்பவங்கள் நேரிட்டால் இனி அவற்றை உடனே மிஸ்டர் மக்கென்ஸியின் பார்வைக்குக் கொண்டு வரவும் அப்படிக் கொண்டுவந்தால் அவர் உடனே கவனிப்பாரென்றும் மிஸ்டர் காஸ்கெல் கூறினார். மேலும் வருமான வரி இலாக்காவை மறுபடியும் திருத்தி யமைப்பதாகவும் வருமான வரிக்காரர்களுள்ள விடத்திலேயே போய் வரி போடுமாறு வருமானவரிக் கணக்கர்கள் தனியாகப் பயிற்றப்பெற்று நியமிக்க ஏற்பாடாயிருக்கிற தென்றும் மிஸ்டர் காஸ்கெல் கூறினார்.

பந்துக்களிடமிருந்தும் தர்ம பராமரிப்புகளிலிருந்தும் சேமதனமாக வைக்கப்படும் பணத்தின் மேல் வரி போடுவதாக மூன்றாவது அம்சத்தைப்பற்றிச் சிறிது கடுமையான தர்க்கம் நடந்தது. செட்டியார்கள் மிதாக்ஷர விதியை யனுஷ்டிப்பவர்களென்றும், பணம் சேமித்து வைக்கக் கொடுப்பவர்கள் மாதர்களென்றும் அதுவும் அவர்களது சீதனமென்றும் மிஸ்டர் காஸ்கெலுக்குத் தெளிவாக எடுத்துரைத்தார்கள். இச்சீதனமும் கல்யாண காலத்தில் பெண்ணுக்குக் கொடுக்கப்படும் நன்கொடையாகும். அச்சீதனத்தின் கதியாதாவதென்று மிஸ்டர் காஸ்கெல் கேட்டபோது, அம்மாதர்கள் பிள்ளையின்றி இறந்தால் அச்சொத்து அவர்களது பிறந்த வீட்டுக்குப் போய்விடு மென்றும் பிள்ளைகள் பிறந்திருந்தால் அவர்களுக்குப் பின் அப் பிள்ளைகளைச் சேருமென்றும் விளக்கிக் கூறினார்கள். அதிலும் ஆண் பிள்ளைகளைக் காட்டிலும் பெண் பிள்ளைகளுக்கே அச் சொத்து கொடுக்கப்படுவதாகும். தர்ம பராமரிப்புகளைப் பற்றிப் பேசியபோது அப்பணம் தர்மஞ் செய்பவர் தமது சொந்த முதலில் வழக்கமாய் ஒதுக்கி வைப்பதுதானே யென்று மிஸ்டர் காஸ்கெல் கேட்டார் அது அப்படியல்ல வென்றும், தம்மால் தர்மத்துக்கு விடப்பட்ட பணத்தில் யாதொரு விதமான ஹக்கு பாத்தியதையும் தமக்கு வைத்துக் கொள்வதில்லை யென்றும். இத்தர்ம சொத்துகளைக்கொண்டு அநேகக் கோவில்களும், மற்றும் பொது தர்மங்களும் நடத்தப்பெறுகின்றனவென்றும், ஒரு விதி விலக்குக் கூடவின்றி எல்லாச் செட்டியார்களும் இப்பராமரிப்பு நிதிகளைக் கையாளுவதில் வெகு நம்பிக்கையோடுள்ளவர்க ளென்றும் எடுத்துக் காட்டப்பட்டது. இதைப் பற்றித் தமக்குத் தெரியுமென்றும், தாம் சமீபத்தில் சென்னையிலிருந்த போது கேள்விப்பட்டிருப்பதாகவும் கூறிச் செட்டியார்கள் இனித் தங்கள் நன்கொடைகளில் தங்களுக்குயாதொரு சம்பந்தமுமில்லை யென்பதைக் காட்டுமாறு அவற்றைச் சர்க்கார் பத்திரங்களாகவாவது அல்லது யுத்தக்கடன்பத்திரங்களாகவாவது மாற்றிவைத்துவிடுவதுநலமென்றும் மிஸ்டர் காஸ்கெல் சொன்னார். என்றாலும் ஏகலக்கமாய் ஒரு விதி யேற்படுத்த முடியாதானதுபற்றி பந்துக்களின் பண விஷயமாகவும் தர்ம பராமரிப்பு விஷயமாகவும் ஒவ்வொன்றையும் அதனதன் யோக்கியதையைப் பார்த்துத் தீர்மானஞ் செய்யப்படுமென்று கூறினார்.

### இரட்டைப் படி வரி.

ஒரு லாபத்தின்பேரில் இரண்டு இடத்தில் இரண்டுதரம் வரி போடப்படுகிறதென்ற விஷயத்தை அடுத்தாற்போல் ஒப்பாளர்கள் எடுத்துக்காட்டினார்கள். இவ்விஷயமாக அதில் சம்பந்தப்பட்ட இரண்டு கமிஷனர்களாலும் தீர்மானிக்கப்பட வேண்டுமென்று மிஸ்டர் காஸ்கெல் கூறிவிட்டு இதைப் பற்றிக் கவனிக்கும்படி மிஸ்டர் மக்கென்சிக்குச் சொன்னார்.

செட்டியார் பிரதிநிதிகள் கூறிய 5. வது விஷயம் என்னவென்றால் சர்க்கார் சம்மதம் பெற்ற கணக்குப் பரிசோதகர்கள் நியமிக்கப்பட வேண்டுமென்பதும் லாப நஷ்ட கணக்குகள் அவர்களது நற்சாட்சிப்பத்திரம் பெற்றவையாயிருக்க வேண்டுமென்பதுமாம். இவ்விஷயத்தில் இன்னும் பர்மாவில் கணக்குப் பரிசோதகர்கள் நியமிக்கப்படவில்லையென்றும் வருமான வரிச் சட்டப் புஸ்தகத்தில் 105வது பக்கத்தில் 64 வது பாராவாக அடியிற் குறிக்கப்பட்டிருக்கும் விஷயத்தைப் பார்க்குமாறும் மிஸ்டர் காஸ்கெல் கூறினார். அவ்விஷயம் வருமாறு:—

"வருமானவரி கொடுப்பவர்கள் திறமையும் நம்பிக்கையும் வாய்ந்த அக்கவுண்டன்டுகளை ஏற்படுத்தி யிருக்கும்போது அவர்களுடைய உதவியைப் பூராவாகவும் உபயோகித்துக் கொள்ளும்படியான ஏற்பாடுகளை வருமானவரி உத்தியோகஸ்தர்கள் எடுத்துக்கொள்ள வேண்டும். எந்தெந்தக் கணக்குப் பரிசோதகர்கள் துல்லியமான கணக்குக் கொடுப்பவர்களென்பதை இவ்வுத்தியோகஸ்தர்கள் அநுபவத்தால் விரைவில் அறிந்துகொள்ள வேண்டும்."

கூடிய சீக்கிரத்தில் பாஷையும் கணக்கும் தெரிந்து பிரத்தியேகப் பயிற்சியுள்ள வருமானவரி உத்தியோகஸ்தர்கள் நியமிக்கப்படுவார்களென்றும் இவ்விஷயத்தில் வரி கொடுப்பவர்களுக்குள்ள கஷ்டங்கள் நீங்கி விடுமென்றும் மிஸ்டர் காஸ்கெல் சொன்னார்.

வருமானவரி அதிகமாய்க் கொடுத்ததைத் திருப்பிக் கொடுப்பதிலுள்ள காலதாமதத்தைப்பற்றி வந்த ஆறாவது அம்சத்தைப்பற்றி, 3 வருஷமாயும் இன்னும் வாபஸ் வராத அதிக வரிகளிருக்கின்றன வென்றும் சில சமயங்களில் 1000 ரூபாய் திரும்பப் பெறுவதற்குள் மேற்கொண்டு சுமார் 800 ரூபாய் வரையில் செலவாகி விடுகிறதென்றும் கூறினார்.

கோர்ட்டு வீதத்துக்கு மேலிருந்தாலும் சட்டப்படி ஏற்பட்ட எவ்வித செலவுக்கும் லாக்ஜாரி வாங்கிக் கொள்ளு

வார்களானால் படிவாங்கின வக்கீல்களைத் தாங்கள் பிடித்துக்கொள்ளக் கூடுமாதலின் கவர்ன்மெண்டுக்கு நஷ்டமொன்றுமில்லை யென்றும் வேடிக்கையாகக் கூறினார். அதிகப்படி வசூலான வரிப் பணத்தை விரைவாகத் திருப்பிக் கொடுத்து விடுவதற்கு ஒருவித மார்க்கம் செய்யப்படுகிறதென்றும் அவ்வேற்பாடு வந்தால் வெகு காலமாகவுள்ள இக்கஷ்டம் விலகி விடுமென்றும் கூறினார். ஏழாவதாகக் கடைசியில் அப்பீல் விண்ணப்பங்களை உண்மையாகவும் இந்தியா ராஜாங்கத்தார் எச்சரித்துக் கூறியுள்ளபடி அநுதாப சித்தத்தோடும் கருத வேண்டுமென்று ஒப்பாளர்கள் கூறினார்கள். இவ்விஷயமாய்ப் புதுச் சட்டப்படி உதவிக் கமிஷனர்கள் சீக்கிரம் நியமிக்கப்படுவார்களென்றும் அவர்கள் பொறுமையோடும் யோசனையோடும் அப்பீல் விண்ணப்பங்களைக் கருதுவார்களென்றும் காஸ்கெல் கூறினார்.

### சட்டப்படி நடக்கும் ராஜ விசுவாசமுள்ள வகுப்பு.

முடிவாகத் தங்கள் வகுப்பினர் சட்டப்படி நடக்கும் ராஜவிசுவாசமுள்ள பிரஜைகளென்றும், தங்கள்வருமானத்தில் நியாயமாக ஏற்படும் எந்த வரியையும் மனப்பூர்வமாகக் கொடுக்கத் தயாராயுள்ளவர்களென்றும்ஆனால் தாங்கமுடியாதபடி அதிக வரி போடுவதை மாத்திரம் பலமாகக் கண்டித்து ஆட்சேபிப்பதாகவும் செட்டியார்களின் பிரதிநிதிகள் மிஸ்டர் காஸ்கெலுக்கு உறுதியாக எடுத்துரைத்தார்கள்.

இதற்காகவே ரொக்க வரவு செலவு கணக்கு ஒழுங்குப்படி வரிபோடவேண்டுமென்றும், அது நியாயமான வழியென்றும் கூறுவதாகவும், அப்படி ஏற்பாடு செய்தால் தங்கள் கணக்குகளை வருஷவாரி முடித்து வருமானவரி அதிகாரிகளிடம் அவற்றைக் கொண்டு வந்து காட்டுவதாகவும் தாங்கள் குறித்துச் சொல்லுவதாகக் கூறினார்கள். அநேக கடன்கள் வருஷக்கணக்காகத் திருப்பிவாங்க முடியாமலிருக்கின்றனவென்றும், என்றாலும் எதாவது ஒரு காலத்து அவற்றைத் திருப்பிப் பெறலாமென்ற நம்பிக்கையின் பேரில் அவற்றைப் புஸதகத்தில் அடித்துவிடாமல் எழுதிவைத்திருப்பதாகவும் ஆனால் வட்டி வராத அவற்றின் பேரிலும் வருமான வரி இலாக்கா வட்டி வருமானங் கூட்டி வரிபோட்டு விடுவதாகவும் ஸ்ரீமான் நாராயணன் செட்டியார் எடுத்துரைத்தார். "வரியைக் கொடுத்துவிடுங்கள். உள்ளபடியே நீங்கள் அக்கடன்களைத் தள்ளி எழுதிவிடும் போது உங்கள் வரிப்பணமும் உங்களுக்கு வாபஸ் கிடைக்கும். என்று மிஸ்டர் காஸ்கெல் கூறினார்.

நாங்கள் முன்னாலேயே எதற்காக வரி கொடுக்கவேண்டும்? ஏன் அக்கடன் தொகையை நாங்கள் பெற்றபிற்பாடு எங்களுக்கு வரி போடக்கூடாது? என்று ஸ்ரீமான் நாகப்பசெட்டியார் கேட்டார். ரொக்க வரவு முறைப்படி வரித்திட்டம் அமைப்பதென்றஒழுங்கு ஏற்படுமானால் இந்தப் பிரச்னைக்கு இடமில்லை யென்று கடைசியில் முடிவாயிற்று.

### மிஸ்டர் காஸ்கெல் கொடுத்த உறுதிகள்.

தாம் சென்னையிலிருந்து தேவகோட்டைச் செட்டியார்களைச் சந்தித்து வருமானவரி சம்பந்தமாகப் பல விஷயங்களைப்பற்றியும் பேசிக் கொண்டிருந்ததாக மிஸ்டர் காஸ்கெல் செட்டியார் சங்க ஒப்பாளர்களுக்குக் கூறினார். இவ்விஷயங்களெல்லாம் யோசனையிலிருப்பதாகவும் அவற்றைப்பற்றிய குறிப்பிட்ட சிபார்சுகள் சீக்கிரத்தில் வெளிவருமென்றும் எடுத்துரைத்தார். இச்சிபார்சுகளைப் பார்த்தால் பிரதிநிதிகள் தமக்கு முன் செய்துள்ள ஆட்சேபனைகளுக்கெல்லாம் சமாதானங் கிடைக்குமென்று கூறினார். செட்டியார்கள் கொடுக்கவேண்டிய தொகைக்கு மேல் ஒரு தம்பிடியாவது தமக்கு வேண்டுவதில்லையென்றும் ஆனால் வரிக்குரித்தான அவர்களுடைய பணத்தில் ஒரு ரூபாயேனும் வரிபோடாமல் விடப் போவதில்லையென்றும் கூறினார். அவ்வளவுதான் தங்களுக்கும் வேண்டியதென்று பிரதிநிதிகளும் உறுதியாகக் கூறினார்கள்.

முழுவதும் அன்போடும் பொறுமையோடும் தங்கள் வார்த்தைகளைக் கேட்டிருந்ததற்காக சங்கப் பிரதிநிதிகள் மிஸ்டர் காஸ்கெலுக்கு வந்தனங் கூறினார்கள். ஒரு மணி நேரத்துக்குமேல் நடந்த இச் சம்வாதம் பின்னர் முடிவு பெற்றது.



சொ. முருகப்பசெட்டியாரால் (பத்திராதிபர்) காரைக்குடி "குமரன்" அச்சுக்கூடத்தில் அச்சியற்றிப் பிரசுரிக்கப்பெற்றது.

